

திருவாவடுதுறை யாதீன வெளியீடு—28.

உ

சிவமயம்.

# சிவஞான போதம்.



ஸ்ரீ மெய்கண்ட தேவ நாயனர்.

விரோதி-ஐப்பசி-ஸ்வாதி நாள்.

1949.

திருவாவடுதுறை யாதீன வெளியீடு—28.

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ மெய்கண்ட தேவ நாயனர்
அருளிச் செய்த

# சிவஞான போத மூலம்

உரையுடனும்
வடமொழிச் சிவஞான போதம் தமிழுரையுடனும்.

இவை
திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து
20-வது குருமகா சந்நிதானம்
**ஸ்ரீ-ல-ஸ்ரீ அம்பலவாண தேசிக சுவாமிகள்**
கட்டளையிட்டருளியபடி

ஷை ஆதீனத்து வித்துவான்
**த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளையால்**
பரிசோதித்துப்பதிப்பிக்கப்பட்டது.

விரோதி — ஐப்பசி — சுவாதி நாள்.
1949.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## ஸ்ரீ மெய்கண்டதேவர் துதி

பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டவிரு தயகமல முகைக ளெல்லாங்
கண்டிறப்பக் காசினிமேல் வந்தவருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெ மேவும்
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாத மெப்போதும் போற்றல் செய்வாம்.

## குருமரபு வாழ்த்து.

கயிலாய பரம்பரையிற் சிவஞான போதநெறி
காட்டும் வெண்ணெ
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பாநு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
[illegible] டையோன் றிருமரபு நீடூழி
தழைக [illegible]

## ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் துதி.

கருணைபொழி திருமுகத்திற் றிருநீற்று நுதலுங்
கண்டாரை வசப்படுத்தக் கனிந்தவா யழகும்
பெருமைதரு துறவோடு பொறையுளத்திற் பொறுத்தே
பிஞ்ஞகனர் மலர்த்தாள்கள் பிரியாத மனமும்
மருவினர்க ளகலாத ஞானமே வடிவாம்
வளர்துறைசைச் சிவஞான மாமுனிவன் மலர்த்தாள்
ஒருபொழுது நீங்காம லெமதுளத்திற் சிரத்தி
லோதிடுநா வினிலென்று முன்னிவைத்தே யுரைப்பாம்.



திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்து
20-வது குருமகா சந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முகவுரை.

"வேதம் பசுவதன்பால் மெய்யா கமநால்வர்
ஓது தமிழதனு ளுள்ளூறுநெய் —போதமிகு
நெய்யி னுறுசுவையா நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்ததமிழ் நூலின் றிறம்."

வேதம் பொது. அது பசுவைப்போல்வது. ஆகமங்கள் சிறப்பு. அவை பசுவினிடத்துப் பால் போன்றன. சிவபிரானுடைய உண்மைத் தன்மையை நன்கு தெளிவிப்பன. வேதாகமங்கள் முழுமுதற்கடவுளாகிய சிவபிரானால் அருளிச் செய்யப்பட்டவை. தேவார திருவாசகங்கள் ஆகிய அருட்பாக்கள் சைவ சமயாசாரியர்களாகிய நால்வரால் அருளிச் செய்யப்பட்டவை. அவை பாலினுள்ளூறும் நெய்யை யொத்தன. நெய்யின் உறுசுவையை யொத்தது ஸ்ரீ மெய்கண்ட தேவ நாயனார் அருளிச்செய்த சிவஞானபோதம். ஸ்ரீ மெய்கண்ட தேவர் சாமுசித்தராய்த் திருவெண்ணெய் நல்லூரிலே திருவவதாரம் செய்தவர். சித்தாந்த சாத்திரங்களில் தலைசிறந்து விளங்குவது சிவஞான போதமே ஆம்.

சிவஞான போதம் சிவத்தை யறிதற்குக் கருவியாகவுள்ள ஒரு ஞான நூல். இது, பொது சிறப்பு என இரண்டு அதிகாரங்களை யுடையது. பிரமாண இயல், இலக்கண இயல், சாதன இயல், பயனியல் என்னும் நான்கு இயல்களையும்; பன்னிரண்டு சூத்திரங்களையும்; முப்பத்தொன்பது அதிகரணங்களையும் உடையது.

இவ்வரிய சிவஞான நூலுக்குப் பல உரைகள் உள. இதற்குப் பழைய வுரை யொன்றுண்டு. அவ்வுரை யியற்றினார் யாவர் என அறியக்கூட வில்லை. சிவஞான போத சிந்தனை என்பது சம்பிரதாய வுரை. இவ்வுரையை யியற்றினார் இவ்வாதீனத்து 3-வது ஞானகுரவராக எழுந்தருளியிருந்த ஸ்ரீ அம்பலவாண தேசிக மூர்த்திகள். திருநெல்வேலிச் சீமையிலுள்ள ஸ்ரீ பாண்டிப்பெருமாள் என்பவர் இதற்கு விருத்தியுரை யொன்று செய்து வைத்துள்ளார். இவ்வாதீனத்து ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் சிவஞான போதத்துக்கு ஒரு சிற்றுரையும், ஒரு பேருரையும் அருளிச்செய்துள்ளார்கள். இதனாலேயே ஸ்ரீ சிவஞான சுவாமிகள் 'திராவிட மாபாஷ்ய கர்த்தர்' என வழங்கப்பெறுவர். இவ்வுரைகளெல்லாம் விரைவில் ஆராய்ந்து இவ்வாதீன வெளியீடுகளாக வர வேண்டுமென ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் திருவருளாணை செய்துள்ளார்கள். அவை ஆராயப்பெற்று வருகின்றன. விரைவில் வெளிவரும்.

இஃது இங்ஙனமாக, இக்காலத்துச் சைவப்பெருமக்கள் யாவரும் இவ்வரிய வுரைகளைப் பயிலுமுன் சிவஞான போதம் மூல பாடத்தையும் பதவுரையையும் எளிதில் கற்றுணருமாறு பன்னிரு சூத்திரங்களையும், அவைகட்குப் பதவுரையையும், வடமொழி கற்போரனைவரும் இந்த ஞானநூலைக் கற்றுணருமாறு வடமொழிச் சூத்திரங்களையும் அவைகட்குத் தமிழுரையையும் சேர்த்துப் பதித்து வழங்க வேண்டுமென இப்போது இவ்வாதீனத்து 20-வது குருமகாசந்நிதானமாக எழுந்தருளியிருந்து சிவக்ஷேத்திர பரிபாலனம், குருக்ஷேத்திர பரிபாலனம், சித்தாந்த சைவ சமயபரிபாலனம், செந்தமிழ்ப் பரிபாலனம் முதலிய அறச்செயல்களை யெல்லாம் புகழ்படச் செய்துவரும் ஸ்ரீ-ல-ஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள் கட்டளையிட்டருளியபடி இவ்வாண்டு ஐப்பசிச் சுவாதி நாளில் வெளியிடப்பெற்றுள்ளது. குணங்கொண்டு கோதாட்டுதல் அறிஞர் கடன்.

உ
சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## பாயிரம்.

மலர்தலை யுலகின் மாயிரு டுமியப்
பலர்புகழ் ஞாயிறு படரி னல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போ லீண்டிய
பெரும்பெயர்க் கடவுளிற் கண்டுகண் ணிருடீர்ந்
தருந்துயர்க் குரம்பையி னுன்மா நாடி
மயர்வற நந்தி முனிகணத் தளித்த
வுயர்சிவ ஞான போத முரைத்தோன்
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணைச் சுவேதவனன்
பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன்
பவநனி வன்பகை கடந்த
தவரடி புனைந்த தலைமை யோனே.

## கடவுள் வணக்கம்.

கல்லா னிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே.

## திருக்கைலாய பரம்பரைத்
## திருவாவடுதுறை யாதீனத்து
## ஞானதேசிகர்கள்.

---

1. ஸ்ரீ நமச்சிவாய தேசிகர்.
2. ,, மறைஞான தேசிகர்.
3. ,, அம்பலவாண தேசிகர்.
4. ,, உருத்திரகோடி தேசிகர்.
5. ,, வேலப்ப தேசிகர்.
6. ,, குமாரசுவாமி தேசிகர்.
7. ,, பிற்குமாரசுவாமி தேசிகர்.
8. ,, மாசிலாமணி தேசிகர்.
9. ,, இராமலிங்க தேசிகர்.
10. ,, வேலப்ப தேசிகர்.
11. ,, பின் வேலப்ப தேசிகர்.
12. ,, திருச்சிற்றம்பல தேசிகர்.
13. ,, அம்பலவாண தேசிகர்.
14. ,, சுப்பிரமணிய தேசிகர்.
15. ,, அம்பலவாண தேசிகர்.
16. ,, சுப்பிரமணிய தேசிகர்.
17. ,, அம்பலவாண தேசிகர்.
18. ,, சுப்பிரமணிய தேசிகர்.
19. ,, வைத்தியலிங்க தேசிகர்.
20. ஸ்ரீ ல-ஸ்ரீ அம்பலவாண தேசிகரவர்கள்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சூர்ணிக் கொத்து.

முதற் சூத்திரம்

1. சகம் பிறப்பிருப்பிறப்பாகிய முத்தொழிலை யுடையது.

2, அது அரனாலே உடையது.

3. மற்றிருவரும் முத்தொழிற்படுவர்கள்.

இரண்டாஞ் சூத்திரம்

1. அரன் உயிர்களின் இரண்டற நிற்பன்.

2. உயிர்களுக்குக்கன்மபலனை அரனே கொடுப்பன்.

3, உயிர்கள் அச்சு மாறியே பிறக்கும்,

4. அரன் சருவ வியாபகன்.

மூன்றாஞ் சூத்திரம்

1. இல்லை யென்கிற அறிவுடனே சொல்லு கையி னாலே அறிவுயிர் உண்டு.

2. எனது உடல் என்று பொருட்பிறிதின் கிழமை யாகச் சொல்லுகையினாலே, உடற்கு வேருய் உயிருண்டு.

3. ஐந்தையும் ஒருவனே அறிதலின், ஒவ்வொன்றை மாத்திரம் அறிகிற ஐந்திற்கு வேறாய் உயிர் உண்டு.

4. கனவுடலை விட்டு நனவுடலே வருகையினாலே, அக்கனவுடற்கு வேறாய் உயிர் உண்டு.

5. நித்திரையிலும் பிராணவாயுத் தொழில் பண்ணவுஞ் சரீரத்துக்குப் புசிப்புந் தொழிலும் இல்லாதபடியினாலே, பிராண வாயுவுக்கு வேறாய் உயிர் உண்டு.

6. மறந்து மறந்து நினைக்கிறபடியினாலே மறவாமல் இருக்கிற அரனுக்கு வேறாய் உயிர் உண்டு.

7. எல்லாத் தத்துவங்களுக்கும் வேறு வேறு பெயர் இருக்கையினாலே, அந்தந்தத் தத்துவங்களுக்கு வேறாய் உயிர் உண்டு.

நான்காஞ் சூத்திரம்

1. அந்தக்கரணங்களுக்கு உயிர் உட்கூடினாலன்றித் தொழில் இல்லாதபடியினாலே, அந்தக் கரணங்களுக்கு வேறாய் உயிர் உண்டு.

2. மல மறைப்பால் உயிருக்கு அறிவு இல்லை.

3. உயிர் மூன்றவத்தைப்படும்.

ஐந்தாஞ் சூத்திரம்

1. உயிராலே தத்துவங்களெல்லாந் தொழில் செய்யும்.

2. அரனாலே உயிர்களெல்லாம் அறியும்.

ஆறாஞ் சூத்திரம்

1. உயிரறிவினாலே அறியப்பட்டதெல்லாம் அழியும்.

2. அப்பிரமேயமாக அறியப்பட்டவனே அரன்.

ஏழாஞ் சூத்திரம்

1. அரன் பாசத்தை அநுபவியான்.

2. பாசம் அரனை அநுபவியாது.

3. உயிர் அவ்வரனை அடையும்; அநுபவிக்கும்.

எட்டாஞ் சூத்திரம்

1. உயிருக்கு நல்லறிவு தவத்தினாலேயே வரும்.

2. உயிருக்குச் சற்குருவாய் வருவது அரனே.

3. உயிர் பஞ்சேந்திரியங்களைப் பற்றுகையினாலே தன்னையும் அறியமாட்டாது.

4. உயிர் பஞ்சேந்திரியங்களிலே பற்றற்றால் தன்னையும் அறியும்.

ஒன்பதாஞ் சூத்திரம்

1. உயிர் அரன் ஞானத்தினாலேயே அரனைக் காணும்.

2. உயிர் பாசத்திலே பற்றற்றால் அரன் வெளிப்படுவன்.

3. பஞ்சாக்ஷர செபம் பண்ணினால், வாசனாமலம் போம்.

பத்தாஞ் சூத்திரம்

1. அரனுடன் ஒன்ருகி நில்.

2. உன்றெழி லெல்லாம் அரன்பணி என்று கொள்.

பதினொராஞ் சூத்திரம்

1. ஞானிக்கு வருகிற விடயங்களை அரனே அநுபவிப்பன்.

2. அரனை மறவாமல் அன்பு இருந்தால் அவனிடத்திலே ஐக்கமாய்ப் போவான்.

பன்னிரண்டாஞ் சூத்திரம்

1. மும்மலங்களையுங் களைக.

2. சிவஞானிகளுடனே கூடுக.

3. சிவஞானிகளையுஞ் சிவலிங்கத்தையுஞ் சிவனெனவே தேறி வழிபடுக.

4. வழிபடாமையை ஒழிக.

திருச்சிற்றம்பலம்.

முற்றிற்று.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவஞான போதம் மூலமும் உரையும்



## முதற் சூத்திரம்

**அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்
றோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதா
மந்த மாதி யென்மனார் புலவர்.**

இதன் பொருள்;- அவன் அவள் அது எனும் அவை— ஒருவன் என்றும் ஒருத்தி என்றும் ஒன்று என்றும் சுட்டப்படும் பிரபஞ்சத்தொகுதி, மூவினைமையின் — (படைத்தல் முதலிய) முத்தொழில் உடைமையால், தோற்றிய திதியே — (ஒருவனால்) தோற்றுவிக்கப்பட்ட உள்பொருளே ஆம், ஒடுங்கி மலத்து உளதாம் — (அது கன்மமலம் பரிபாகம் ஆகும்பொருட்டுத்தான் ஒடுங்குதற்கு நிலைக்களம் ஆகிய) கடவுளினின்றும் மலம் நீங்கும் பொருட்டு (மீளத்) தோன்றுவதாம், (ஆகலான்) அந்தம் ஆதி — அச்சங்கார கர்த்தாவே (உலகத்துக்கு) முதற் கடவுளாம், என்மனார் புலவர் — என்று சொல்லுவர் அறிஞர் — (எ—று).

## இரண்டாஞ் சூத்திரம்

**அவையே தானே யாயிரு வினையிற்**
**போக்கு வரவு புரிய வாணையின்**
**நீக்க மின்றி நிற்கு மன்றே.**

(இ—ள்) அவையே ஆய் — (சிவபிரான்) உயிர்களே யாய், தானே ஆய்—(உயிர்களுக்கு) வேறுமாய், அவையே தானே ஆய்—(உயிர்க்குயிராதற்றன்மையால்) உடனுமாய், இரு வினையிற் போக்கு வரவு புரிய —(தமது ஆஞ்ஞா சக்தியினால் ஆன்மாக்கள்) இருவினை காரணமாக இறத்தலையும் பிறத்தலையும் செய்ய, ஆணையின் நீக்கம் இன்றி அன்றே நிற்கும் — (தமது சமவேத) ஆஞ்ஞா சக்தியினின்றும் பிரிப்பின்றி அநாதி தொடுத்து நின்றருளுவர்- (எ—று).

## மூன்றாஞ் சூத்திரம்

**உளதில தென்றலி னெனதுட லென்றலி**
**னைம்புல னொடுக்க மறிதலிற் கண்படி**
**லுண்டிவினை யின்மையி னுணர்த்த வுணர்**
**மாயா வியந்திர தனுவினு ளான்மா [தலின்**

(இ—ள்) இலது என்றலின் உளது — இல்லை என்று சொல்லுதலால் (இலதென்று கூறும்) ஆன்மா உளது, எனது உடல் என்றலின் உளது — எனது உடம்பு என்று கூறுதலால் (உடம்புக்கு வேறாக) ஆன்மா உளது, ஐம்புலன் அறிதலின் உளது — (சத்த முதலிய) ஐம்புலன்களை (வேறாக) அறிதலால், (அவற்றுக்கு வேறாக) ஆன்மா உளது, ஒடுக்கம் அறிதலின் உளது — (ஐம்புலனும் ஒடுங்கப்பெறும் சூக்கும தேகம் வாயிலாக எய்தும்) சொப்பனத்தானத்தில் நிகழ்ந்தவற்றை (வேறாக) அறி

தலின் ஆன்மா உளது, கண்படில் உண்டி வினையின்மை யின் உளது — துயிலுமிடத்து (இன்ப துன்ப) நுகர்ச்சி யும் (உடம்பின்) சேட்டையும் (பிராண வாயுவுக்) கின் மையில் (அதற்கு வேறாக) ஆன்மா உளது, உணர்த்த உணர்தலின் உளது — அறிவிக்க அறிதலின் (அறிந் தாங்கு அறிந்து நிற்கும் பிரமத்துக்கு வேறாக) ஆன்மா உளது, மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா உளது — மாயா காரியங்களால் ஆக்கப்பட்ட சூத்திரப்பாவை போலும் உடம்பின் கண்ணே (எல்லாம்கூடிய சமுதாயத் துக்கு) வேறாக ஆன்மா உளது — (எ—று).

நான்காஞ் சூத்திரம்

**அந்தக் கரண மவற்றி னொன் றன்றவை**
**சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா**
**தமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே.**

(இ—ள்) ஆன்மா அந்தக்கரணம் அவற்றின் ஒன்று அன்று — ஆன்மாவானது மனம் முதலிய அந்தக்கரணம் நான்கனுள் ஒன்றன்று, (ஆயினும்) சகசமலத்து உண ராது — சகசமாய் நின்ற மலத்தினால் உணர்வின்றி, அமைச்சு அரசு ஏய்ப்ப — மந்திரிமாரோடு கூடிநின்ற அரசன் போல, அவை சந்தித்து—அவ்வந்தக்கரணங்க ளோடு கூடி நின்று, அஞ்சவத்தைத்தே — ஐந்தவத்தை யுடையதாம் — (எ—று).

ஐந்தாஞ் சூத்திரம்

**விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்**
**களந்தறிந் தறியா வாங்கவை போலத்**
**தாந்த முணர்வினின் றமியருள்**
**காந்தங் கண்ட பசாசத் தவையே.**

(இ—ள்) விளம்பிய உள்ளத்து—(மேலே) கூறப்பட்ட ஆன்மாவினுல், மெய் வாய் கண் மூக்கு — மெய் வாய் கண் மூக்குச் செவி என்பன, அளந்து அறிந்து அறியா — தத்தமக்குள்ள விஷயங்களை (இஃதின்னதென்று) அளவிட்டறிந்தும் (தம்மையும், தம்மை அதிஷ்டித்துச் செலுத்தும்) ஆன்மாவையும் அறியமாட்டா, ஆங்கு அவை போல — அந்த இந்திரியங்கள் போல, தாம் தம் உணர்வின் — (ஆன்மாக்களாகிய) தாம் தமது அறிவிற்கு வியஞ்சகமாகிய, தமி அருள் — முதல்வனது திரோதான சத்தியை (அறியமாட்டா), அவை காந்தம் கண்ட பசாசத்து — அவ்வான்மாக்கள் (அவ்வாறு உணர்தல்) காந்தத்தை (எதிர்ப்பட்ட) இரும்பு போலாம் — (எ—று).

## ஆருஞ் சூத்திரம்

**உணருரு வசத்தெனி னுணரா தின்மையி**
**னிருதிற னல்லது சிவசத் தாமென**
**விரண்டு வகையி னிசைக்குமன் னுலகே.**

(இ—ள்) உணர் உரு எனின் அசத்து — முதல்வர் அறியப்படும் பிரபஞ்சம் போல்வர் எனின் அசத்தாவர், உணராது எனின் இன்மை — (ஒருவாற்றானும்) அறியப்படாதவராயின் சூனியப்பொருளாம், இன் — ஆதலின், இரு திறன் அல்லது — இரு பகுதியுமின்றி, இரண்டு வகையின் சிவசத்தாம் என — (ஒருவாற்றான் அறியப்படாமையும், ஒருவாற்றான் அறியப்படுதலும் ஆகிய) இரண்டு வகையாலும் சிவசத்தாமென்று, உலகு இசைக்குமன் — மெய்யுணர்வுடையார் கூறுவர் — (எ—று).

### ஏழாஞ் சூத்திரம்

**யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலிற்**
**சத்தே யறியா தசத்தில தறியா**
**திருதிற னறிவுள திரண்டலா வான்மா.**

(இ—ள்) சத்து எதிர் யாவையும் சூனியம்—சத்தாகிய சிவத்தின் சன்னிதியில் எல்லாம் பாழாம் ஆதலின், சத்து அறியாது — சத்தாகிய சிவம் (பிரபஞ்சத்தை) அறிதல் செய்யாது, அசத்தில் அது அறியாது — சடமாதலிற் பிரபஞ்சம் சத்தாகிய சிவத்தை அறியாது, இருதிறன் அறிவுளது — (சத்து அசத்து என்னும்) இருதிறத்தையும் (பிரித்தறியும்) அறிவுடையதாகிய ஒன்று உளது, இரண்டு அலா ஆன்மா — (அது) சத்து அசத்து என்னும் இரண்டு தன்மையும் அல்லாத (சத்தசத்தாகிய) ஆன்மாவாம் — (எ—று).

### எட்டாஞ் சூத்திரம்

**ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்**
**தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவி**
**டன்னிய மின்மையி னரன்கழல் செலுமே.**

(இ—ள்) ஐம்புல வேடரின் – ஐம்புல வேடருள்ளே, வளர்ந்து அயர்ந்தனை என – வளர்ந்து (நின்பெருமையை) மறந்தாயென்று, தம் முதல் குருவுமாய் — தமக்குள்ளே (நின்றுணர்த்தி வந்த) பரம்பொருள் ஆசாரியருமாகி, தவத்தினில் உணர்த்த — (முன் ஈட்டிய) புண்ணிய விசேடத்தினால் அறிவிக்க, விட்டு — (அவ்வைம்புல வேடரை) விடுத்து, அன்னியம் இன்மையின் அரன் கழல் செலும்—அனன்னியமாந் தன்மையின் அம் முதல்வர் திருவடியை அடையும் — (எ—று).

## ஒன்பதாஞ் சூத்திரம்

**ஊனக்கண் பாச முணராப் பதியை**
**ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி**
**யுராத்துனைத் தேர்த்தெனப் பாச மொருவத்**
**தண்ணிழ லாம்பதிவிதி யெண்ணுமஞ்**
**செழுத்தே.**

(இ—ள்) ஊனக்கண் பாசம் உணராப்பதியை — பசு ஞானத்தினாலும் பாச ஞானத்தினாலும் அறியப் படாத சிவனை, சிந்தை ஞானக் கண்ணினில் நாடி — தன் அறிவின் கண்ணே அருண் ஞானத்தினால் நாடுக, உராத் துனை — பரந்து திரிதற்கண், தேர்த்துப் பாசம் என ஒருவ — (அதிவேகமுடைய) கானற்றேர் போல்வதாம் பாசம் என்று அதனை நீங்க, தண் நிழலாம் — சிவபிரான் (அவனுக்குக்) குளிர்ந்த நிழலாவர், அஞ்செழுத்து விதி எண்ணும் — (அங்ஙிலை பிறழாதிருக்க) ஸ்ரீ பஞ்சாக் கரத்தை விதிப்படி (ஆன்மா) கணிக்கும் — (எ—று),

## பத்தாஞ் சூத்திரம்

**அவனே தானே யாகிய வந்நெறி**
**யேக னாகி யிறைபணி நிற்க**
**மலமாயை தன்னொடு வல்வினை யின்றே.**

(இ—ள்) அவனே தானே ஆகிய அந்நெறி — (பெத்த நிலையில்) அவ்வான்மாவே தானேயாய்ச் சிவன் நின்ற அம்முறையானே, ஏகன் ஆகி இறைபணி நிற்க — (முத்தி நிலையில்) சிவனே தானெனும்படி ஆன்மா இறைபணியில் நிற்குமாயின், மலமாயை தன்னொடு வல்வினை இன்று — மலம் மாயை என்பவற்றோடு வலிய கன்மமும் இல்லையாம் (எ—று).

பதினொன்றாஞ் சூத்திரம்

**காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற்**
**காணவுள் ளத்தைக் கண்டு காட்டலி**
**னயரா வன்பி னரன்கழல் செலுமே.**

(இ—ள்) காணும் கண்ணுக்கு — காட்சியையுடைய கண்ணுக்கு, காட்டும் உளம்போல் — (உருவத்தைக்) காட்டிக் (காண்கின்ற) ஆன்மாப்போல, காண உள்ளத்தைக் கண்டு காட்டலின் — (ஆன்மாவானது) விஷயத்தைக் காணுமாறு அவ்வான்மாவுக்குச் (சிவபிரான்) காட்டியும் கண்டும் நிற்றலான், அயரா அன்பின் அரன் கழல் செலுமே — மறவாத அன்பினாற் சிவபிரான் திருவடியைக் கூடும் — (எ—று).

பன்னிரண்டாஞ் சூத்திரம்

**செம்மலர் நோன்றாள் சேர லொட்டா**
**வம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ**
**மாலற நேய மலிந்தவர் வேடமு**
**மாலயந் தானு மரனெனத் தொழுமே.**

(இ—ள்) செம்மலர் — சிவந்த மலர்போலும், நோன்றாள் — வலிய பாதத்தை, சேரல் ஒட்டா — கூடவொட்டாத, அம்மலம் கழீஇ — அந்த (மூன்று) மலங்களைப் போக்கி, அன்பரொடு மரீஇ — சிவபத்தரோடு கூடி, மால் அற நேயம் மலிந்தவர் வேடமும் — மயக்கமறச் (சிவபெருமானிடத்து) அன்பு மிகுந்துள்ளவருடைய திருவேடத்தையும், ஆலயந்தானும் அரன் எனத்தொழுமே — சிவாலயத்தையும் சிவமெனக் கண்டு வழிபடுவான் (சீவன்முத்தன்) — (எ—று),

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.



திருச்சிற்றம்பலம்.

"வாழ்க வந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாம்அரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே"

திருச்சிற்றம்பலம்.

—திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# வடமொழிச் சிவஞான போதம்.

(தமிழுரையுடன்)

---

இந்நூல் நந்திபெருமானுக்குக் காமிகம் முதலிய இருபத்தெட்டாகமங்களின் பொருளொருமை உணர்த்துதற்கு எழுந்த நூலாகலின் அவ்வாகமங்களின் சாரமாயுள்ளதாம். பன்னிரண்டு சூத்திரமுடையது. இதிற் கூறப்படும் பொருள் பதி பசு பாசம் என்னும் திரிபதார்த்தங்களாம். அவற்றுள், முதற்சூத்திரம் பதி உண்மைக்குப் பிரமாணம் கூறுகின்றது.

ஸ்த்ரீபும்நபும்ஸகாதித்வாஜ்ஜகதஃ கார்யதர்சநாத் |
அஸ்தி கர்தா ஸ ஹ்ருத்வைதத் ஸ்ருஜத்யஸ்மாத் ப்ரபுர்ஹரஃ ||

இ-ள். ஸ்த்ரீபும்நபும்ஸகாதித்வாத் — பெண் ஆண் அலிகளின் ஆதித்தன்மையினாலே, — கார்யதர்சநாத்- காரியமாந்தன்மையை (அநுமானித்து) உணர்தலால் (உண்டாகிய செய்யப்படுந் தன்மையால்), — ஜகதஃ - தோன்றியொடுங்கும் தன்மையுடைய பிரபஞ்சத்திற்கு, — கர்தா அஸ்தி — தோற்றுதலைச்செய்யும் நிமித்தகாரணமாகிய கருத்தா ஒருவன் உளன், - ஸஃ ஏதத் ஹ்ருத்வா ஸ்ருஜதி-

அவன் இப்பிரபஞ்சத்தை ஒடுக்கி (மீள) உளதாக்குவன்,- சுஷாசு ஹாா: வூஹ: - இதனால் சங்காரத்தொழிலைச் செய்யுங் கடவுளாகிய சிவனே முதற்கடவுள். எ-று. 1

ஆதித்தன்மையாவது உற்பத்தியும், அவயவப்பகுப்புடைமையும், அசேதனமாய்ப் பலவாதலும் முதலியனவாம். இங்ஙனம் கூறப்பட்ட ஆதித்தன்மையினாலே பிரபஞ்சம் காரியமாதலும் காரியமாதலினால் கருத்தாவை உடைத்தாதலும் பெறப்பட்டது.

இனி, ஏதுவுடையதும், அநித்தியமும், அவ்வியாபகமும், கிரியையுடையதும், அநேகமாவதும், சார்புடையதும், குறியுடையதும், அவயவமுடையதும், பிறர்வயமுடைதுமாயுள்ளது காரியமென்றும் அதனின்வேறாயது காரணமென்றும் சாங்கிய நூலுட் கூறப்பட்டது.

ஆகலான், உருவமுடைமையானும், பிரிவுடைமையானும், பிறவற்றினிடையே நிற்றலானும், அவயவமுடைமையானும், கட்புலப்படநின்ற கடம் முதலியவற்றின் நிலைபோலத் தோற்ற ஒடுக்கங்களை முன்னும் பின்னும் உடைமையானும், அசேதனத்தன்மையோடு கூடிய பன்மையானும் சாதிக்கப்பட்ட காரியத்தன்மையையுடைய பிரபஞ்சம் கருத்தாவையுடையதேயாம்.

இதனால் காரியமாய்க் காணப்படும் பிரபஞ்சத்திற்குக் கருத்தா ஒருவன் உளன் என்பது அநுமான அளவையாற் சாதிக்கப்பட்டது.

கூநுஸ்வநுாவிதொzநநு: கதா கூ__ நூஸாரதீ: ||
கூரொதி ஸம்ஸுதிம் வ"ம்ஸா கூஜூயா ஸஉவெதயா |

இ-ள். கத்தா - மேற்கூறிய சங்காரகாரணனாகிய சிவன், கநந்ய: கவி - (பொருட்டன்மையால் உயிர்களுக்கு)வேறாயி னும்,-வ்யாவ்ருதஃ கநந்ய: ஸந - வியாபகத்தினாலே வேற் றுமையின்றி அவ்வுயிர்களேயாய், - ஸ்வஜ்ஞயா ஸவெ்தயா - ஆணையென்னும் பரியாயப்பெயருடைய தன்னை விட்டுநீங் காத சிற்சத்தியினாலே, - ஸாஂஸாரம் - ஆன்மாக்களுக்கு, கவிநா ஸாராதஃ - அவற்றின் இருவினைகளுக்கு ஈடாக,- ஸஂஸ்ருதிஂ கரோதி - சிருட்டிமுதலிய பஞ்சகிருத்தியங் களைச் செய்கின்றான். 2

அச்சிவன் பொருட்டன்மையால் உயிர்களின் வேறாயி னும் கலப்பினால் அவ்வுயிர்களேயாய் நின்று தன்னை விட்டு நீங்காத சிற்சத்தியைக்கொண்டு அவை இருவினைக்கீடாக இறத்தல் பிறத்தல்களைப்புரியும் வண்ணம் செய்வன் என்பதாம்.

ஈண்டுச் சமவேதசத்தி என்றது திரோதான சத்தியை என்க. அச்சத்தி மலத்தைச் செலுத்துதலினால் மலம் என்று உபசரித்துக் கூறப்படும். கன்மங்கூறவே அக்கன் மத்துக்குப் பற்றுக்கோடாகிய மாயையும் அவ்விரண்டற் கும் மூலமாகிய ஆணவமலமும் பெறப்படும்.

மேற்சூத்திரத்தாற் பெறுவிக்கப்பட்ட கருத்தா உயிர் களின்பொருட்டுப் பஞ்சகிருத்தியஞ் செய்யுமாறு கூறும் முகத்தானே ஆணவம் கான்மியம் சுத்தமாயை அசுத்தமா யை திரோதானசத்தி என்னும் பஞ்சபாசங்களினுண்மை சாதிக்கப்பட்டது.

நேதிதோ மமதோத்ரிக்தாக்ஷோபரதி போததः ।
ஸ்வாபே நிர்போகதோ போதே போத்ருத்வாதஸ்த்ய
ணுஸ்தநௌ ॥

இ-ள். ந இதிதः-ஆன்மா இலது என்றலானும்,—மமதா உத்ரிக்தே: —(உடம்பை யான் எனத் தற்கிழமைப் பொருள்பட வழங்குமாறின்றி) எனது எனப் பிறிதின் கிழமைப்பொருள்பட வழங்குதலின் மிகுதிப்பாட்டானும்,—அக்ஷ போததः - ஐம்பொறிகளைக்கொண்டு அறிதலானும்,—உபரதி போததः - ஐம்பொறிகளும் ஒடுங்கின சொப்பனத்தானத்தில் நிகழ்ந்தவற்றை (கனவின்கண் மயங்கி) அறிதலினானும்,— ஸ்வாபே நிர்போகதः-(சுழுத்தியும் துரியமுமாகிய) நித்திரையிலே (விடயங்களினிடமாக வரும்) இன்பத்துன்பநுகர்ச்சி இன்மையானும், — போதே போத்ருத்வாத் - சாக்கிராவத்தைதயில் (அறிவிக்க) அறிதலுடைமையானும்,—தநௌ - இவையனைத்துங் கூடிய கூட்டமாகிய உடம்பின்கண்ணே,—அணுः அஸ்தி - இவற்றின் வேறாய் உயிரென்பது ஒன்று உண்டு. எ-று.

தநு - வியாபிக்கப்படுவது.

இதனால் இலதென்றன் முதலிய அறுவகை ஏதுக்களானும் தநு என்னும் பெயராற் பெறப்படும் குறிப்பேதுவானும் முறையே சூனியான்மவாதி, தேகான்மவாதி, இந்திரியான்மவாதி, சூக்குமதேகான்மவாதி, பிராணன்மவாதி, விஞ்ஞானன்மவாதி, சமூகான்மவாதி என்னும் எழுவகையும் மறுத்து இவற்றின் வேறாய் உயிர் எனப்படுவது ஒன்று உண்டு என்பது சாதித்தவாறு.

ஆத்மாந்த:கரணாத்பிந்நோப்யந்விதோ மந்த்ரிஸஹவத் |

ஜாக்ரதாத்யவஸ்தாஸ்தோ ராஜவத் ஸ்வக்ரிய: ||

இ-ள். மம ராஜவத் ஸ்வக்ரிய: ஆத்மா—ஆணவமலத்தினால் மறைக்கப்பட்ட தன் ஞானசத்தி கிரியாசத்திகளையுடைய ஆன்மாவானவன், —அந்த:கரணாத் பிந்நோபி— அந்தக்கரணங்களாகிய மனம், புத்தி, அகங்காரம், சித்தம், என்னும் இவற்றின் வேறாயினும், — மந்த்ரிஸஹவத்— (நுண்ணுணர் வின்மையிற் சூழ்ச்சித்துணைவராகிய) அமைச்சரோடுகூடிநின்று தந்தொழில் நடாத்தும் அரசன் போல,—அந்வித: - (அறிவு நிகழுமாறு) அவ்வந்தக்கரணம் முதலியவற்றோடு தான் வியஞ்சகமும் * வியங்கியமும் ஆகிய சம்பந்தத்தாற் கூடினவனாகி, - ஜாக்ரதாத்யவஸ்தாஸ்த: - சாக்கிரம் முதலிய ஐந்தவத்தையில் நிற்பவனவன். எ-று. 4

மந்திரி பரிவாரம் முதலியோருடன் கூடிப் புறவிடயங்களை யறிந்த அரசன் புறத்தே பரிவாரங்களையும் அகத்தே மந்திரியையும் பிரித்து அந்தப்புரத்துச் செல்லுமாறு போல, முப்பத்தைந்து கருவிகளோடு கூடிப் புறவிடயங்களை அறிந்து இலாடத்தானத்தினின்ற ஆன்மா மூலாதாரத்தில் அடங்கும் முறைமையில் ஆங்காங்கு நிற்றற்குரிய கருவிகளைப் பிரித்துச் சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீத மென்னும் ஐந்தவத்தையடையும். எனவே, கருவிகளோடு கூடி அவத்தையுறுதல் ஆன்மாவின் தடத்த லக்கணம் என்பதாம்.

விஷஜ்யக்ஷாணிவா௱ஂஸாய–ாநுநஷ்யஂஷொடவிஶஂஹ௱நா। தஷிகாரீஶிவஸ்ஷஞகாஞொடயொவத்தஷஞயெக॥

இ-ள். சக்ஷர்ணி வா௱ஂஷா சயா–ாநு விஷஜி-மெய் வாய் கண் மூக்குச்செவி என்னும் இந்திரியங்கள் புருடனால் (பிரேரிக்கப்பட்டனவாய்த்) தத்தம் விடயங்களை அறிகின்றன. இங்ஙனமன்றி,— ஷ்யஂ ந விஷஜி- தாமே அறிய மாட்டா, அதுபோல,— ஷஃ சவி ஶஂஹ௱நா வெத்தி- அவ்வான்மாவும் தனக்குப்பிரேரகனுகிய சிவனால் வினைப் பயன்களை அறிந்து அனுபவிக்கும். இங்ஙனமன்றி,—ஷ்யஂ ந வெத்தி - தானே அறிந்து அனுபவிக்கமாட்டாது,—ஶிவஃ விகாரீ ஊதி வெக - சிவன் (அங்ஙனம் பிரேரித்தலால் வியாபார முடையனுதலின்) விகாரமுடையன் என்னில்,— ஷஃ- அவன்,—காஜஃ சயஃ வக - காந்தம் (தான் விகாரமின்றி நின்று) இரும்பைத் தன் சந்நிதிமாத்திரையின் வலித்துக்கொள்ளுமாறுபோல, – தஂ நயெக – அவ்வான்மாவைத்தான் விகாரமின்றிநின்று தன் சங்கற்பமாத்திரையிற் பிரேரிப்பன்,— தக ந - ஆகலான் அதுபற்றி அவன் விகாரமுடையனல்லன். எ-று. 5

இந்திரியங்கள் ஆன்மாவால் அறிவு விளங்கப்பெறுதல்போல ஆன்மாவும் சிவனால் அறிவு விளங்கப்பெறும் என்பதாம். 6

சஷுஶ்யஂவெஷஸஹ்ாவொ ஷுஶ்யஂ வெஜயிஊ ஹவெக। ஶஂஹொஷ்ஞ்தியெரகெண ஜெஷ்யஂ ரூவெஂ விஷவெ–ாஂ யாஃ॥

இ-ள். ஸம்ஹோ: ரூபவந்- சிவனுடைய சொரூபமானது,—அக்ர ஹ்ய வெக - (ஒருவாற்றானும்)காணப்படாததாயின்,— தஸ்ய அஸத்தாவ: ஸவெக - (அதற்கு முயற்கோடுபோல) இலதாந்தன்மை உண்டாம்,—க்ராஹ்யம் வெக- (கடபடாதிகள்போலச்) சுட்டியறியப்படுவதாயின்,— தஸ்ய ஜடிமா ஸவெக - (யாதுசுட்டியறியப்படுவது அது சடம் என்னும் வியாத்தியுண்மையான்) அதற்குச் சடத்தன்மையுண்டாம், ஆதலால்,— தக வ்யதிரேகேண- அறியப்படாததும் அறியப்படுவதும் என்னும் அவற்றின் வேறான அநுபூதி ஞானத்தால்,—ஜ்ஞேயம் இதி வ்யாஹு: விஞா:- அறியப்படுமென்று ஞானிகள் அறிவார்கள், எ-று. 7

சிவசொரூபம் பாசஞான பசுஞானங்களானறியப்படாது சிவஞானமொன்றானே அறியப்படும் என்பதாம்.

நாவித்வஸ்து நியஸ ம வெத்தி நவித்தஸ்து உஹெ இயஃ ।
யூவஞ்சஸிவயோவெத்தாயஸஜூதாதயோஃவ்யஃ ॥

இ-ள். விக ஸந்நிெயௗ அவிக நவெத்த-சிவமாகிய சித்தின் சந்நிதியில் பிரபஞ்சமாகிய அசித்து அறியமாட்டாது, (விளங்கித்தோன்றாது என்றபடி) ஆதலின்,—தெ உஹெ இயஃ நவித்த: - சிவமும் பிரபஞ்சமும் என்னும் இரண்டும் ஒன்றை ஒன்று அறியமாட்டா,—யஃ யூவஞ்ச ஸிவயோ: வெத்தா - எவன் பிரபஞ்சத்தையும் சிவனையும் அறிகின்றானோ,— ஸஃ தயோஃவ்யதிரிக்த ஆத்மா ஸ்யாத் - அவன் அவ்விரண்டற்கும் வேறாகிய ஆன்மாவாம், எ-று, 8

சித்தும் அசித்தும் மறுதலைப்பொருள் ஆதலின் சித்தாகிய சிவம் அசித்தாகிய பிரபஞ்சத்தை அறியமாட்டாது,

அசித்தாகிய பிரபஞ்சம் சித்தாகிய சிவத்தை அறியமாட்டாது, ஆகலால், இவ்விரண்டையும் சிவசத்தியினலே அதுவதுவாய் நின்று அறியும் பொருள் ஆன்மா என்றவாறும், எனவே, சார்ந்தன் தவண்ணமாய் நிற்றல் ஆன்மாவின் சொரூபலக்கணமென்பதாம்,

ஸஹாக்ஷைரிந்த்ரியவ்யாதைர் ஸ்வாம ந வேத்ஸி வோயிதஃ। ஈஸ்வரேண தாது மாஹேஷணா ஸ்தநேந்யா யஸ்தவ்ய பூர்வோதி தஸ்வடு ॥

இ-ள். யஸ்த்ய — முன் செய்துகொள்ளப்பட்ட புண்ணியமுடைய ஆன்மாவானவன்,— மாஹேஷணா- ஞானசாரியனலே,-இந்த்ரிய வ்யாதை ஸஹஷைக்ஷா-ஐம்பொறிகளாகிய வேடரோடு கூடியிருந்து,— ஸ்வாத்ம ந வேத்ஸி வோயிதஃ - உன்பெருமையை நீ அறிகின்றில்லை(உன்பெருமையாவது இது) என்று அறிவுறுக்கப்பட்டவனகி,— வத்தாது ஈஸ்வரை - இவ்வைம்பொறிகளாகிய வேடுவர்களை விட்டு,—ஸஸ்ந்யஃ தஸ் வடு பூர்வோதி- வேற்றுமையில்லாதவனகி அச்சிவனுடைய திருவடியை (ஞானக்கிரியா சொரூபமாகிய அறுகுணங்களை) அடைகின்றான், எ-று 9

ஐம்பொறி வசப்பட்டு அலைந்த உயிர் முன்செய்த புண்ணிய விசேடத்தால் சிவன் குருவடிவங்கொண்டு எழுந்தருளி வந்து தீக்ஷைசெய்து உபதேசிக்க அவ்வைம்பொறிகளை விட்டு அச்சிவன் திருவடியைத் தலைப்படுமென்பதாம்.

விசூஸாதநித்ஸ்வாஷ்டே ஸோ த்ர்ஸ்வா வந்த்ரீஸீவிகாடு ।
ஸ்லூஸிவவதூவாயாம்யாபெ தஸ்வாக்ஷாம்ஸாயிஃ ॥

இ-ள், ஸுதீ: - நற்புத்திமானானவன், — ஈஶம் விஶ்வத்ருஶாம் அத்ருஶ்யம் - (பாச அறிவினாலும் உணரப்படாத) முதல்வனைச் சிவஞானமாகிய கண்ணினாலே தன் அறிவின்கண்ணே கண்டு, ... வ்ருத்திஜாலிகாம் த்யக்த்வா - விருத்தியாகிய பிரபஞ்சமென்னும் சாலத்தை விட்டு, ... ஶிவபதாஶ்ரய: - சிவன் திருவடிநீழலையடைந்து, — முக்திபஞ்சாக்ஷரீம் த்யாயேத் - முத்திபஞ்சாக்ஷரத்தைத் தியானிக்
கக்கடவன், எ-று, 10

தியானித்தல்- சுத்தமானதமாகச் செபித்தல்,

குருவினால் தீக்ஷை செய்யப்பெற்றுச் சிவனைத்தலைப்பட்டவன் தன்னறிவின்கண்ணே அச்சிவனைத்தியானிக்க, அதனால் உயிரைப் பற்றிய பாசம் நீங்கும், அதுநீங்கவே, சிவஞானம் பிறவித் துயராகிய வெப்பத்துக்கு நிழலாய் வெளிபபடும், அங்ஙனம் வெளிப்படப் பெற்றவன் அந்நிலை சலியாமைப் பொருட்டுப் பஞ்சாக்ஷரமந்தரத்தைச் செபிக்கவேண்டும் என்பதாம்,

ஶிவேநைக்யம் கத: ஸித்தஸ் தததீநப்ரவ்ருத்திக: |
மலமாயாத்யஸம்ஸ்ப்ருஷ்டோ பவதி ஸ்வாநுபூதிமாந் ||

இ-ள், ஶிவேந ஐக்யம் கத: ஸித்த: - சிவனோடு ஒற்றுமைப்பட்டுச் சின்மாத்திரையாகச் சேவித்து நின்ற புருஷன், — தததீந ப்ரவ்ருத்திக: - அச்சிவனுக்குக் கீழ்ப்பட்ட தன் தொழிலையுடையவனும், ... மலமாயாத்யஸம்ஸ்ப்ருஷ்ட: - மலம் மாயை முதலியவற்றால் தீண்டப்

படாதவனுமாகி,...ஸூாநு ஸங்கிரொநு ஸவதி- சுவானு பூதியாகிய சிவபோகமுடையவனவன், எ-று,

சிவனோடு ஒற்றுமைப்பட்டு நின்று அச்சிவன் பணி வழுவாது நிற்கவே மலமாயை கன்மங்கள் நீங்கிச் சிவ போகத்தையடைவன் என்பதாம்,

உ்ரூஸொஉ-ுஸ-ுயிதா வாதூா தஸ்யஉஸ-ுயிதா ஸிவஃ |

தஸூாதூஸிநுவராஂஸக்திஂகுாுயாஉாதெூாவகாரகெ ||

இ-ள். உ்ரூஸொஃ உஸ-ுயிதா வ ஆதூா - கண்களுக்கு உருவத்தைக் காட்டுபவனும் காண்பவனும் ஆன்மா வேயாம், (அதுபோல),...தஸ்ய உஸ-ுயிதா வ ஸிவஃ- அவ்வான்மாவுக்கு விடயத்தைக் காட்டுபவனும் காண்பவ னும் சிவனே,...தஸூாகூ- ஆதலால்,... ஆதெூாவகாரகெ தஸிநு-தனக்கு உபகாரியாகிய அச்சிவனிடத்தில்,... வராஂ ஸக்திஂ குாயாகூ- மேலானபத்தியைச் செய்யக்கட வன், எ-று, 11

கண் ஒரு உருவத்தை அறியும்படி உயிர் அதனோடு ஒற்றுமைப்பட்டு நின்று அதற்கு காட்டுமுபகாரஞ் செய் வது மாத்திரமன்றிக் கண்டுமுபகரிக்கும், அதுபோல, உயிர் ஒருவிடையத்தை அறியும்படி இறைவன் அதனோடொற் றித்து நின்று அதற்கு அவ்விடயத்தைக்காட்டி உபகரித் தன் மாத்திரையன்றிக் கண்டும் உபகரிப்பன், இங்ஙனம் உபகரிக்குந் தன்மையை மறவாமைப் பொருட்டு அவனை வழிபடுக, என்பதாம்,

ஶ்ரேணீஸ் ஸதா பூஜ்ய தத்வேஷாம் ஸ்தைலம் ஶிவாலயம்।
ஸதம் விசார்ய விஜ்ஞான போதம் ஶைவார்த்த நிர்ணயம் ॥

இ-ள், ஶ்ரேணீஸ் ஸதா பூஜ்ய- முத்தியின்பொருட்டுச் சிவன்முத்தர்களை அடைந்து,...தேஷாம் வேஷம் ஶிவாலயம் ஸதா- அவர்களுடைய திருவேடத்தையும் திருக்கோயிலையும் வழிபடுக,...ஸதம் இவ்வாறே,...ஶிவ ஜ்ஞானபோதம் சிவஞானபோதமென்னும் இந்நூலில்,... ஶைவார்த்த நிர்ணயம் விசார்ய- சைவாகமங்களின் பொருள் நிச்சயத்தை அறிக, எ-ன், 12

முற்றுப்பெற்றது.